28th January 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் இதில் ஈடுபட முடியாது.

SRI N. K. PALANISAMI : ஸார், தொழிலாளிகளோ அல்லது தொழிற் சங்கங்களோ செய்யக்கூடிய ஆட்சேபனைகளை அமுல் செய்யாத முதலாளிகளின் மீது இன்டஸ்டிரியல் டிஸ்பியூட் ஆக்ட் செக்ஷன் 92-படி ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Primarily that does not arise.

SRI M. KALYANASUNDARAM : இப்போது எத்தனை தொழிற் கோர்ட்டுகள் நம்முடைய மாகாணத்தில் இருக்கிறது ? இன்னும் தொழிற் கோர்ட்டுகளை அதிகப்படுத்த வேண்டுமென்ற அபிப்பிராயம் ஏதாவது இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : மூன்று தொழிற் கோர்ட்டுகள் இருக்கின்றன. இப்போது தொழிற் கோர்ட்டுகளை அதிகரிக்க வேண்டுமென்ற அவசியமே இல்லை. நம் ராஜ்யத்திலுள்ள மூன்று கோர்ட்டுகளாலும் தீர்க்கப்பட வேண்டிய கேஸ்கள் இன்னும் 51-தான் இருக்கின்றன. இந்த நிலையிலே கோர்ட்டுகளை அதிகரிக்க வேண்டியதில்லை.

*Vacant lands*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of Q. No. 214 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 214 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஒவ்வொரு முனிசிபல் மேஜர் பஞ்சாயத்து நகரங்களைச் சுற்றியுள்ள காலி நிலங்களை சர்க்கார் ஆர்ஜிதம் செய்து நியாய விலைக்கு வீடுகள் கட்டுவதற்காக விநியோகிக்க திட்டமிட்டுள்ளதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Under the Land Acquisition and Development Scheme of the Government of India, it is proposed to acquire lands on the outskirts of important municipal towns in the State subject to availability of funds, and proposals in this regard have been called for from the Collectors concerned. In view of the limited funds available, the actual execution of the scheme is confined to Madras City for the present.

*Slums*

* 221 Q.—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the number of private slums in the City of Madras taken up for improvement in the Second Five-Year Plan through the Corporation of Madras; and

(b) the number of such slums improved in the said period?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Two private slums, namely, (i) Vazhaippucheri Slum, (ii) Kamaraja Nagar Slum have been taken up for improvement in the Second Five-Year Plan, by the Corporation of Madras.

(*b*) Vazhaippucheri Slum has been partially improved during the period.

**SRI S. PAKKIRISAMI PILLAI**: இந்தக் கேள்வியிலுள்ள தனிப்பட்டவர்களுடைய சேரிகளைச் சீர்படுத்தும் விஷயத்தில் கார்ப்பரேஷன் அதிகாரிகளால் சாத்தியமாகாது என்று இப்போது அனுபவத்திலிருந்து தெரிய வருகிறது. அதனாலே அரசாங்கத்தார் வேறு ஏதாவது ஒரு முறையில் இப்படிப்பட்ட சேரிகளைச் சீர்திருத்தும் உத்தேசம் உண்டா?

**THE HON. SRI R. VENKATARAMAN**: இப்போது ஹவுசிங் போர்டு என்று ஒன்று வருகிற சட்டசபைக் கூட்டத்திலே கொண்டுவர இருக்கிறது. அந்தச் சட்டம் நிறைவேற்றப்படுமானால், அதிலே கார்ப்பரேஷனோ அல்லது சி.ஐ.டி.-யோ இந்த வேலையைச் செய்ய வேண்டி இருக்காது. சென்னையிலே ஒரு யூனிட் அமைக்கப்படும். அந்த யூனிட் இந்த வேலைகளை எடுத்துக் கொண்டு செய்யும். அதனால் மேற்படி தாமதம் குறைவுபடலாம் என்று எதிர்பார்க்கிறேன்.

*Note-books*

***227 Q.—SRI A. VEDARATHNAM**: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பள்ளி மாணவர்களின் நோட்டுப் புத்தகங்களில் மேல் தவறான பக்கங்களை அச்சிட்டு மாணவர்கள் ஏமாற்றப்படுவதைத் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது?

THE HON. SRI R. VENKATARAMAN: On a representation made to Government they requested the Chambers of Commerce to advise the trade to desist from this unhealthy practice and print the actual number of pages on the wrapper of note-books.

**SRI A. VEDARATHNAM**: நோட்டுப்புத்தகங்கள் பேரில் அச்சிட்டிருக்கிற பக்கங்கள் அந்தப் புத்தகங்களில் காணப்படுவதில்லை. இதனால் மாணவர்கள் பெரிய அளவு ஏமாற்றப்படுகிறார்கள். 'சேம்பர் ஆப் காமர்ஸ்' இதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டு, இப்பொழுது அது அமுலில் வந்திருக்கிறதா என்பதை தயவுசெய்து அறிவிக்கவேண்டும். இல்லையென்றால் அதை விரைவில் அமுலுக்குக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளுமா?